டைது; இப்படி அந்தப் பதார்த்தங்களின் ஸப்தாதி விஷயாநுபவத்தால் வந்த ஸுகவிசேஷங்கள் என்றபடி. மேற்சொன்ன ஈத்ராதிபதார்த்தங்களில் ஸப்தாதிவிஷயாநுபவம் பண்ணும் பதார்த்தத்தையும், அவ்வவருக்கும் ஸமுதாயமான பதார்த்தத்தையும் பிரித்துச் சொல்லுகையாலே ஈத்ராதிகளால் வந்த ஸுகவிசேஷங்களும் ஸப்தாதிவிஷயாநுபவத்தால் வந்த ஸுகவிசேஷங்களும் என்று பேசித்திருக்கிறது; மாதாபிதாக்கள் பக்கலுண்டான ஸுகவிசேஷம் ஸந்தோஷாதிகளும் வித்யாதிகளுமான கார்யங்களிலேயாயிருக்கும்; ஆக இவற்றால் வந்த ஸுகவிசேஷங்கள் என்றது ஆனந்தத்தைப் பிறப்பிக்கும் ஸுகவிசேஷங்கள் என்றபடி.

(அவ) பாரலௌகிகத்தை உபபாதிக்கிறார்— (பாரலௌகிகத்தில் காமமாவது) என்று தொடங்கி.

௨௰ பாரலௌகிகத்தில் காமமாவது— இதில் விலக்ஷணமாய், தேஜோரூபமான ஸ்வர்க்காதிலோகங்களிலே சென்று, பசிதாஹமோஹசோகஜராமரணாதிகளின்றிக்கே, ஆர்ஜித்த புண்யத்துக்கீடாக அம்ருதபானம் பண்ணி, அப்ஸரஸ்ஸுக்களோடே, ஸப்தாதிவிஷயாநுபவம் பண்ணுகை.

(வ்யா) அதாவது— பாரலௌகிகத்தில் காமம் ஆவது பரலோகஸம்பந்தமான காமம் ஆகிறது, இதில் விலக்ஷணமாய் - கர்மஸம்பந்தமான இந்த லோகத்தில் காட்டில் வைலக்ஷண்யத்தை உடைத்தாய், விலக்ஷணமாவது அன்னபானபதார்த்தபோகாதிகளும் மூத்ரபுரீஷாதிகளுமின்றிக்கேயிருப்பதோடு அநிமிஷத்வமும், அம்ருதவேளையும் முதலான விசேஷங்களுமுண்டாகையாலே இந்த மநுஷ்யலோகத்தில் காட்டில் வைலக்ஷண்யம் என்றபடி. தேஜோரூபமான ஸ்வர்க்காதிலோகங்களிலே சென்று - இந்த பூலோகத்திலிருந்து 'ஜ்யோதிஷ்டோமேந, ஸ்வர்க்ககாமோ யஜேத' என்கிறபடியே ஜ்யோதிஷ்டோமம், வாஜபேயம், அச்வமேதம், பௌண்டரீகம் முதலான யஜ்ஞாதிகளைப்பண்ணி, ஸ்வதர்மஸ்வபத்தாலே, ஸ்தூலதேஹவிமோசநமானவுடனே தேஜோமயமாக

அப்ஸரஸ்— தேவலோகத்திலுள்ள பெண்கள் (ரம்பை, ஊர்வசி, திலோத்தமை, க்ருதாசி, மேனகை முதலியவர்கள்) இவர்கள் பாற்கடலில் பிறந்தவரெனவும், காசிபர்க்கு முனி என்னும் பார்யையிடம் பிறந்தவர்களெனவும் புராணங்கள் கூறும்.



மான ஸ்வர்க்கம் ஆகியவைகளுள்ள ஸ்வர்க்காதிலோகங்களிலே போய், பசி தாஹ மோஹ சோக ஜராமரணாதிகள் இன்றிக்கே - பசியும், தாஹமும், ஸப்தாதிகளிலுண்டான வ்யாமோஹமும், ததபாயத்தில் சோகமும், அஸஹ்யமான ஜரையும் மரணமும், ஆதிஸப்தத்தாலே நரகமும் ஆகிற அவஸ்தாஸப்தகமின்றிக்கே, சோகம் என்கிறது— ஸம்ஸர்க்கவியோகாதி விபோகாதிகளுக்கும் உபலக்ஷணம்; ஆர்ஜித்தபுண்யத்துக்கீடாக - பூலோகத்திலிருக்கும்போது யஜ்ஞாதிகளைப்பண்ணியும், அன்னதான அர்த்ததாநாதிகளைப்பண்ணியும், ஸம்பாதித்த ஸுக்ருதத்துக்குத்தகுதியாக, அம்ருதபானம் பண்ணி - தேவர்கள் தரும் அம்ருதத்தைக்குடித்து, அப்ஸரஸ்ஸுக்களோடே ஸப்தாதிவிஷயாநுபவம் பண்ணுகை - அப்ஸரஸ்ஸுக்களுடனே ஸப்தாதி விஷயங்களின் அநுபவத்தைப் பண்ணுவது.

(அவ) ஆத்மாநுபவத்தை அருளிச்செய்கிறார்— (ஆத்மாநுபவமாவது) என்று தொடங்கி.

௨௧ ஆத்மாநுபவமாவது— துக்கநிவ்ருத்திமாத்ரமான கேவலாத்மாநுபவமாத்ரத்தையும் மோக்ஷமென்று சொல்லுவார்கள்.

(வ்யா) அதாவது— ஆத்மாநுபவம் ஆகிறது - ஆத்மாவையே அநுபவிக்கிற அநுபவம் ஆகிறது, துக்கநிவ்ருத்திமாத்ரமான - ஆத்யாத்மிகாதி தாபத்ரயாத்மக ஸம்ஸார துக்கநிவ்ருத்திமாத்ரமாகிற, கேவல ஆத்மாநுபவமாத்ரத்தையும் - கேவலஸப்தத்துக்கு கேவலனுடைய ஆத்மாநுபவமாத்ரத்தையும் என்னுதல்; அன்றிக்கே பகவதநுபவாதிகளின்றிக்கே மிகவும் ஆத்மாநுபவமாத்ரத்தையும் என்றுஞ் சொல்லுதலாகவுமாம்; மோக்ஷம் என்று சொல்லுவர்கள் - இப்படிப்பட்ட ஆத்மாநுபவமாத்ரமாயிருந்துள்ளதனையும் மோக்ஷம் என்று சிலர் சொல்லுகிறார்கள். "யோகோமம்ருதம் ஸ்தாநம்" என்கிறபடியே துக்கரூபமான ஸம்ஸாரநிவ்ருத்தியையும், ஸ்தூலஸூக்ஷ்மதேஹநிவ்ருத்தியையும் உடையவனுப், விரஜைக்கு அக்கரையிலேயிருக்கிற ஸ்தாநத்தில் ப்ரவேசித்து, தன்னையநுபவிக்கிறது எதுவோ, அதுக்கும் மோக்ஷம் என்று பேரக் கடவது. கேவல துக்கநிவ்ருத்திமாத்ரமான ஆத்மாநுபவத்தை மோக்ஷம் என்று சொல்லில் ஸம்ஸாரத்திலிருந்தும் ஸரீரவிசிஷ்டனுமிருந்தும் ஜ்ஞாநத்தாலே துக்கநிவ்ருத்தியைப்பண்ணிக்கொண்டு தன்னையநுபவிக்கிறது மோக்ஷஸப்தத்துக்கு எங்ஙனே சேரும்

ளையும், ஸமஸ்த உபசாரங்களையும் பண்ணுகை காயககைங்கர்யம்; ஆகிறவிம்மூன்றாலேயும், யதாபலமநுஷ்டித்து தங்கள் சக்தி எம்மாத்திரம் இருக்குமோ வஞ்சனையின்றிக்கே அம்மாத்ரம் நடத்திக்கொண்டு, ஈச்வரன் ஸ்ரீமந்நாராயணன் ஆகிற ஈச்வரன், சேஷியாய் சந்தன குஸும தாம்பூலாதிகளைப்போலே ஸமஸ்தசேதன அசேதனங்களையும் தன்னுடைய இஷ்டவிநியோக அர்ஹமாகப்படைத்துள்ள சேஷியாகவும். நியந்தாவாய் ஸ்வபுத்யதீநமாகசேதன அசேதனங்களுடைய எல்லா வியாபாரங்களும் உண்டாகும்படியிருக்கும் நியந்தாவாகவும், ஸ்வாமியாய் சேதன அசேதனங்களைத் தனக்கிஷ்டவிநியோக உசிதவஸ்துக்களாகப் படைத்தொரு ஸ்வாமி ஆகவும், சரீரியாய் "யஸ்யாத்மா சரீரம்" என்றபடி தங்களை சரீரமாக உடையனான ஆத்மாவாகவும்.வ்யாபகனாய் விஷ்ணுசப்தத்தாலே சொல்லுகிற அந்தர்வ்யாப்தி பஹிர்வ்யாப்திகளையுடைய வ்யாபகனாகவும், தாரகனாய் தன்னுடைய ஸ்வரூபஸங்கல்பங்களையொழிந்தபோது சேதனாசேதனங்களுக்கு ஸத்தாஹாநி பிறக்கும்படி நியமேந அவற்றைப்பற்றி நிற்கும் தாரகன் ஆகவும்,ரக்ஷகனாய் சேதனாசேதனங்களுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு பாலனம் பண்ணுகையும் இஷ்ட, அநிஷ்ட, ப்ராப்தி பரிஹாரங்களைப்பண்ணிக் கொடுக்கையும் ஆகிற ரக்ஷணத்தைப்பண்ணும் ரக்ஷகன் ஆகவும், போக்தாவாய் சேதனாசேதனங்களுக்கு அந்தர்யாமியாயிருந்தாலும் சேதனர் போக்தாக்களன்றிக்கே தானே போக்தாவாய் இருக்குமவன் என்றும், தங்களையநுபவிப்பான் அவனென்றுமிறே இவர்கள் நினைவு; வத்ஸலாத்மாவாஸம்பவமிறே அவனுக்கிங்குள்ளது. "அஹமந்நம்" என்று இவன் அந்நமாகவும், "அந்நாத:" என்று அவன் போக்தாவாகவுமிறே ச்ருதி சொல்லிற்று. அவன் அந்நமானால் இவன் "அந்நாத:" என்று போக்தாவாயிருக்கும்; பகவதநுபவமிறே இவன் பண்ணுமது! ஸ்ரேஷ்டரூபபோக்த்ருத்வமில்லையே! "ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்கும்" என்றிறே இவர் தாமே ஸ்ரீவசனபூஷணத்திலருளிச் செய்தது. பத்ததசையில் சேதனனுடைய போக்த்ருத்வம் கர்மாநுகுணமாயிருக்கும். பத்ததசையோடு முக்ததசையோடு வாசியற ஈச்வரனே போக்த்ருத்வமாயிருக்கும் "லோகவத்து லீலாகைவல்யம்" என்கிறபடியே இந்த விபூதியிலநுபவம் ஈச்வரனுக்கு இச்சாப்ரயுக்தமாயும்,லீலாப்ரயுக்தமாயுமிருக்கும்ஆகையாலேபோக்தாவாகவும் ஸர்வஜ்ஞனாய் "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்றபடி ஸமஸ்தத்தையும் அறியும் ஸர்வஜ்ஞனாகவும், ஸர்வசக்தியாய் "பராஸ்ய சக்தி:" என்றும் "ஜகத்ப்ரக்ருதிபாவோ யஸ்ஸா சக்தி:" என்றுஞ் சொல்லுகிறபடியே அகடிதகடநாஸாமர்த்யாதி விசிதங்களாய் ஜகத்ப்ரக்ருதிபாவமாயிருக்குமுள்ள ஸர்வசக்தி ஸம்பன்னன் ஆகவும், ஸர்வ ஸம்பூர்ணனாய் "ஸர்வபூர்ணஸ்ஸ:" என்றபடி ஸ்வரூபாதிகளாலேயும், ஐச்வர்யாதிகளாலேயும் என்றாலும் ஒன்றுங் குறைவில்லாதிருக்கும் அந்த ஸம்பூர்ணனாகவும், அவாப்த ஸமஸ்தகாமனாயிருக்கிற "உத்பத்யந்தே-ப்ரலீயந்தே" என்று பிறக்கவும் நசிக்கவுமான சேதனமநோரதங்கள் போலன்றிக்கே, ஸ்வஸங்கல்பாயத்தப்ராப்தி பொருந்துமந்த ஸமஸ்தமநோரதங்களுடையனாகும் அவாப்தஸமஸ்தகாமன் ஆகவும்,இருந்துள்ள இவற்றில் சேஷித்வ-ஸ்வாமித்வ-ரக்ஷகத்வ- ஸர்வஜ்ஞத்வஸர்வசக்தித்வங்களாகிறவிவை ப்ரணவத்தில்"தஸ்யப்ரக்ருதி" ஆகிற அகாரத்திலே ப்ரதிபாதிக்கப்பட்டவை. ஸர்வஸம்பூர்ணத்வ-அவாப்த ஸமஸ்தகாமத்வங்கள் நம: பதத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டவை, நியந்த்ருத்வ-சரீரித்வ-வ்யாபகத்வ-தாரகத்வ போக்த்ருத்வங்களாகிறவை. சதுர்த்தி விசிஷ்டமான நாராயணபதத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டவை. ஆகாரத்தையும் ஈச்வரனுடைய விக்ரஹஆகாரங்களையும், ஆகாரம் ஸ்வரூபம். தான் அவனுக்கு மகாரவாச்யனாய்சேதனனாகிறதான்கீழ்ச்சொன்ன ஆகாரங்களையுடையனான அகாரவாச்யனாகும் ஈச்வரனுக்கு. சேஷமாய் சந்தனகுஸுமதாம்பூலாதிகளைப்போலே இஷ்டவிநியோகார்ஹமாயிருக்கும் சேஷம் ஆகவும், நியாம்யமாய் ஈச்வரஜ்ஞாநாதீனமான ஸமஸ்த வ்யாபாரங்களையுடையனாகிற நியாம்யம் ஆகவும், ஸ்வம்மாய் ஸ்வாமியான ஈச்வரனுக்கு ஸ்வத் ஆகவும், அதாவது உடைப்பொருளாகவும், சரீரமாய் சரீரியான அவனுக்கு சரீரமாகவும், வ்யாப்யனாய் வ்யாபகனான அவன் வ்யாபிகைக்கு யோக்யமான பதார்த்தமாகும் வ்யாப்யன் ஆகவும், தார்யமாய் அவனுடைய ஸ்வரூபஸங்கல்பங்களை யொழிந்தபோது தன் ஸத்தாஹாநி பிறக்கும்படியிருக்கும் தார்யம் ஆகவும், போக்யமாய் பாரதந்த்ர்யாதிகளாலே போக்ய பதார்த்தம் ஆகவும், அஜ்ஞனாய் ஜ்ஞானநித்யமுண்டாயிருந்ததேயாகிலும், ஈச்வரனைப் பற்ற தேஹாத்மாபிமானியைப் போலேயிருப்பதொருவனாகையால் அஜ்ஞன் ஆகவும், அசக்தனாய் எத்தனை ஜ்ஞாநாதிகள் இருந்தாலும் ஸ்வரக்ஷணத்தில் சக்தியில்லாதவனுமிறே. ப்ரபன்னனுக்கு ஸ்வரூபவிருத்தமிறே

ஸ்வாக்ஷணே ஸ்வான்வயம். அதனாலே அசக்தன் ஆகவும், அபூர்ணனாய் கைம்முதலில்லாத தரித்ரன் ஆகவும், அகிஞ்சகம் ஸ்வரூபமிறே இவனுக்கு. ஸாபேக்ஷனாய் அவன் கைபார்த்திருக்கும் அபேக்ஷாஸஹிதன் ஆகவும், இருக்கிற ஆகாரத்தையும் மேல்சொன்ன விதங்களில் யதார்த்தப்ரகாரத்தாலேயிருக்கிற சேதநன் ஆகிற தன்னுடைய ஆகாரத்தையும், அதாவது ஸ்வரூபத்தையும், அநுஸந்தித்துக்கொண்டு அனுஸந்தானம் பண்ணிக்கொண்டு, "களைவாய் துன்பம் களையாது ஒழிவாய் களைகண்மற்றில்லேன்;' என்று துன்பங்களைவாய்-துக்கங்களைப் போக்குவாய், களையாதொழிவாய் போக்காமல் விடுவாயாகில், களைகண்மற்றில்லேன்-கதிவேறேயில்லாதவனாவேன் என்பதாக, அதவாது ரக்ஷகாந்தர கதியில்லேன் என்றபடி; உபாயத்தில் ஸர்வபரங்களையும் அவன் பக்கலிலே பொகட்டு ஸித்தோபாயபூதனான ஈச்வரன் விஷயத்தில் தன்னுடைய ஆத்மாத்மீயங்களின் பரங்களையும் வைத்து, நிர்பரனாயிருக்கை. பரமில்லாதவனாயிருப்பது. (௩௯)

அவ- இதன் மேல் ஆசார்யாபிமானத்தினுடைய வேஷப்ரகாரத்தை அருளிச் செய்கிறார். (ஆசார்யாபிமானமாவது) என்று தொடங்கி.

மூ-சம் ஆசார்யாபிமானமாவது இவையொன்றுக்கும் சக்தனன்றிக்கேயிருப்பானொருவனைக் குறித்து, இவனுடைய விழவையும், இவனைப்பெற்றுலீச்வரனுக்குண்டான ப்ரீதியையுமனுஸந்தித்து, ஸ்தனந்தய ப்ரஜைக்கு வ்யாதியுண்டானால் அது தன் குறையாக நினைத்து ஔஷத ஸேவையைப் பண்ணும் மாதாவைப்போலே இவனுக்காகத் தான் உபாயானுஷ்டானம் பண்ணி ரக்ஷிக்கவல்ல பரம தயாளுவான மஹாபாகவதனபிமானத்திலேயொதுங்கி "வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டும்" என்று சொல்லுகிறபடியே ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையம் அவனிட்ட வழக்காக்குகை.

40. ஆசார்யலக்ஷணமாவது:— ஹம்ஸத்தின் லக்ஷணத்தையுடையவராவர்கள் ஆசாரியான். அதாவது ஈச்வரன் பிரம்மாவுக்கு வேதப்ரதானம் பண்ணும்போது ஹம்ஸரூபமாகவிருந்ததற்கடி ஆசாரியன் சேதனனுக்கு ஜ்ஞானப்ரதானம் பண்ணும்போது ஹம்ஸலக்ஷணத்துடனிருக்க வேணு



வ்யா. அதாவது ஆசார்யாபிமானம் ஆவது-ஆசார்யனுடைய அபிமானம் ஆகிறது, இவையொன்றுக்கும் கர்மயோகாத்யுபாயங்கள் நான்கிலும் ஒன்றுக்குங்கூட, அன்றிக்கே-ஆர்த்தவேஷமாகவும் த்ருப்த வேஷமாகவும் இருந்துள்ள ப்ரபத்தியின் ப்ரகாரமிரண்டிலும் ஒன்றுக்குங்கூட என்னிலுமாம்; ப்ரபத்தியையும் கூட்டிச் சொன்னது- "மஹாவிச்வாஸபூர்வகம்" என்னும்படி அவ்யபிசாருசியும், மஹாவிச்வாஸமும், "த்யாகஸ்வீகாராவித்யங்கம்" என்றபடி ஸித்தோபாயவாணங்கமாகிற த்யாகமும், ஸ்வீகாரமுமாகிற இவையுடையனாயிருக்கிற இருப்பு அரிதாகையாலே சொன்னபடி., ஸித்திர்பவதிவாநேஹ" என்கிறபடியே- கேவல பகவத்ஸ்வரூபத்தையும் தன்னுடைய ஸ்வரூபத்தையும் பார்த்தால் அவன் ஸ்வரூபமானது-ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டமாயும், தன் ஸ்வரூபமானது, தோஷவிசிஷ்டமாயுமிருக்கையாலேபயம் வர்த்திக்கும். அவனுடைய க்ருபாதி குணங்களைப்பார்த்தால் "என்னடியார் அது செய்யார்" என்றபடி இவன்றனக்கெத்தனை தோஷங்களுண்டாயிருந்தாலும் கிர்பாணுயிருக்கைக்கு உடலாகையாலே இந்த பய அபயங்களிரண்டும் யாவச்சரீரபாதமிருக்கையாலே- "நஸம்சய:" என்றும், "கச்சதா" என்றும் "தேவுமற்றறியேன்" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ரீ சத்ருக்னாழ்வான் மதுரகவிகள் போலேயிருக்கையே ஸ்வரூபமிறே! சக்தனன்றிக்கே 'ஜ்மாந்தரஸஹஸ்ரேஷு" என்றும் "சாந்தோதாந்த: என்றும் சொல்லுகிறபடியே இந்த்ரிய ஜயமுதலான குணங்கள் கர்மாதிகளுக்கு வேண்டுமவைகளாலும் சிரகால ஸாத்யங்களாகையாலும், ஸ்வரூபவிருத்தங்களாகையாலும், கர்மாதிகளைச்செய்யச் சக்தனன்றிக்கே யிருக்கை,

மென்றே. ஹம்ஸமானது ஶுத்த வெள்ளை நிறமாகையாலே, இவரும் ஶுத்தஸ்வபாவராயிருப்பர். அதுக்கு கமனஸாதனமான இரண்டு பக்ஷங்கள் போல் இவருக்கும் கமனஸாதனம் ஜ்ஞானாநுஷ்டானங்கள். ஹம்ஸமானது சேற்றில் கால்வையாதே தாமரைமலரிலிருக்குமாப்போல, இவரும் ஸம்ஸார அன்னவில் கால்வையாதே மானஸபத்மத்தில் மனதை செலுத்துவர். அதுபாலும் நீரும் கலந்துவைத்தால் பாலையெடுக்குமாப்போலே, இருவரும் அஸார அல்பஸாரமான சாஸ்த்ரங்களை விட்டு ஸாரதமமான சாஸ்திரத்தை பஜிப்பர்- அதின் நடை அழகாய் ஒரேவிதமாயிருக்குமாப்போலே, இவரும் ஶ்ரேஷ்டமான ஆசாரத்தில் ஊன்றி அதில்குறைவு வாராமலிருப்பர். கடலில் அலைகள் மோதினாலும் அதற்குப்பின் வாங்கா

பர:" என்று ஸர்வேச்வரனுக்கு அஸாதாரணமாகப் பாத்வம் ப்ரதிபாதியா நிற்கச்செய்தேயும், "ஹிரண்யகர்ப:" என்றும், "நஸந்நசாஸத்" என்றுஞ்சொல்லுகிற வசக்யங்களாலே தேவதாந்தரங்களுக்கு "ஸ ஆத்மா" என்னும்படி சரீரசரீரிபாவத்தாலே அர்த்தத்தை ப்ரதிபாதியாதே அவர்களுக்குப் பாத்வம் உண்டு என்று ப்ரதிபாதிக்கிற ஜ்ஞாநமும், ஸமத்வ ப்ரதிபத்தியும் "ஸத்ப்ரஹ்மா" இத்யாதி வாக்யத்தாலே ஸஹபடிதனானவன் என்கிற மாத்ரங்கொண்டு, ஸாமாநாதிகரண்யத்தாலே அர்த்தத்தை ப்ரதிபாதியாதே ஸமனாகச் சொல்லுகிற ஜ்ஞாநமும், க்ஷுத்ரதேவதா விஷயத்தில் சக்தியோகப்ரதிபத்தியும் க்ஷுத்ரதேவதைகள் என்று ப்ரஹ்மருத்ராதிகளைச் சொல்லுதல்; அன்றிக்கே, ருத்ராம்சபார்வத்யம்சங்களுண்டான அல்ப தேவதைகளாகவுமாம். க்ஷுத்ரர் என்றது தாங்களும் க்ஷுத்ரராய், அநித்யங்களாய், அஸ்திரங்களாய், அல்பங்களான பலன்களைத் தருமவர்கள் என்னுமத்தாலே, இப்படியிருக்கிற க்ஷுத்ரதேவதாவிஷயத்தில் சக்தியுண்டென்று சொல்லுகிற ஜ்ஞாநமும், "பராஸ்ய சக்தி:" என்று ஸர்வசக்தி ஸம்பந்நனாய், "ப்ராஜாபத்யம்" இத்யாதிப்படியே- ஆர்த்தாதி சதுர்வித புருஷர்களுக்கும் தர்மாதி புருஷார்த்த சதுஷ்டயத்தையுங்கொடுக்குமிடத்திலும் அவனுக்கு சக்தியில்லை என்று சொல்லுகிற ஜ்ஞாநமும், அவதார விஷயத்தில் மாநுஷப்ரதிபத்தியும் "ஸஹதேவை:" என்றும், "யஸ்யாம் ஜாத:" என்றும், "ஆதியஞ்சோதி" என்றும் சொல்லுகிறபடியே- ஸாக்ஷாத்வைகுண்ட வாஸியான ஸர்வேச்வரனே "ஸம்பவாமி யுகே யுகே" என்று ஆச்ரித ரக்ஷணார்த்தமாக வந்து ராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்தான் என்று சொல்லாதே, "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றும் "அஹம் வோ பாந்தவோ ஜாத:" என்றுந்தானே அருளிச்செய்தான் என்கிற உக்திமாத்ரங்கொண்டு அந்த ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் பண்ணுகிற மனுஷ்யத்வஜ்ஞாநமும், அர்ச்சாவதாரத்தில் அசக்தியோகப்ரதிபத்தியும் "ந சக்ஷுஷா பச்யதி" என்னும்படியிருக்கிற ஸர்வேச்வரன் "பின்னானார் வணங்குஞ்சோதி" என்று பின்புள்ளாரான ஆச்ரித அநாச்ரித விபாகமற தத்ஸம்ரக்ஷணார்த்தமாக ஸௌலப்யத்தாலே ஸ்வர்ண ரஜத தாம்ர தாரு சிலா ம்ருண்மயமானவற்றைத் திருமேனியாகப் பரிக்ரஹித்து, "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" என்கிறபடி ப்ரஹ்மாதி தேவதைகள் தொடங்கி ஸர்வர்க்கும் கண்காண நின்று ஸர்வபலன்களையும் கொடுக்கும் என்று



நினையாதே, "ததிச்சயா" என்றபடி கேவல ஸ்வாதந்த்ர்யாதிகளின்றிக்கே பிருக்குமவனைப்போலே இருந்து இச்சேதநருடைய கண்ணுக்கு விஷயமாய்க் கொண்டு நிற்கையை யிட்டு, இந்த பிம்பத்தில் சக்தியில்லை என்று சொல்லுகிற ஜ்ஞாநமும். ஆக, தேவதாந்தரபாத்வ ப்ரதிபத்யாதி பஞ்சகம் பரஸ்வரூப விரோதியாகக்கடவது. (43)

(அவ.) புருஷார்த்த விரோதியாவதேது? என்ன அத்தையுபாதிக்கிறார்.—(புருஷார்த்த விரோதியாவது) என்று தொடங்கி.

ஸூ-சச. புருஷார்த்த விரோதியாவது புருஷார்த்தங்களில் இச்சையும், தானுகந்த பகவத் கைங்கர்யங்களில் இச்சையும்.

(வ்யா.) புருஷார்த்த விரோதி ஆவது உபாயவிரோதியாகிறது. புருஷார்த்த அந்தரங்களில் இச்சையும், தாபத்ரயங்களிலே மூழ்கி ஈச்வரனுடைய ஸ்வரூப-ரூப-குண-விபூதிகளின் அநுபவகைங்கர்யங்களே ஸமஸ்தவித புருஷார்த்தங்களாக விருக்கச்செய்தே ஐச்வர்யாதி க்ஷுத்ரபலங்களில் இச்சை பிறக்குமதும்; தானுகந்த பகவத்கைங்கர்யங்களில் இச்சையும் 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்றபடி ப்ராவண்யாதிசயத்தாலே இளையபெருமாள் ஸகலவித கைங்கர்யமும் பண்ணும்போது, ஸ்வேஷ்டகைங்கர்யத்தில் அந்வயம் வந்ததோ என்று பெருமாளுக்குத் திருவுள்ளமாக அத்தையறிந்து 'க்ரியதாமிதி' என்று விண்ணப்பம் செய்தாப்போலே ஸ்வஇஷ்ட பகவத்கைங்கர்யத்தில் இச்சையும், ப்ரபந்நனுக்கு ஸ்வீகாரத்தில் ஸ்வகதமும் அநுபவத்தில் ஸ்வபோக்த்ருத்வமும் கூடாதிறே. ஆக புருஷார்த்த அந்தரங்களிலும், தானுகந்த பகவத்கைங்கர்யத்திலும் இச்சை புருஷார்த்தவிரோதியாகக்கடவது.

(அவ.) உபாயத்துக்கு விரோதிகளானவற்றை அருளிச்செய்கிறார் மேல் (உபாயவிரோதியாவது) என்று தொடங்கி.

ஸூ. சரு உபாயவிரோதியாவது உபாயாந்தர வைலக்ஷண்யப்ரதிபத்தியும் உபாயலாகவமும் உபேயகௌரவமும் விரோதிபாஹுள்யமும்.

---

45 உபேயகௌரவமாவது.— "ஒழிவில்காலத்தில்" ஆழ்வார் அருளிச்செய்தப்ரகாரம் "வழுவிலா" அடிமைசெய்வதே உபேயகௌரவமாவது. அதாவது இளையபெருமாள்படைவீடென்றும்காடென்றும்பெருமை

(வ்யா.) அதாவது– உபாயவிரோதி ஆவது - ப்ராபகவிரோதி ஆகிறது; உபாயாந்தர வைலக்ஷண்ய ப்ரதிபத்தியும் - ஸ்வயத்ந-ரூபங்களாய்,ஸ்வரூபவிரோதிகளாயுமிருக்கிற கர்மாதிகள் மூன்றுக்கும் விலக்ஷணத்தை ப்ரதிபாதிக்கிற ஜ்ஞானமும்; உபாயலாகவமும் - ப்ரபத்த்யுபாயத்தில் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திபூர்வக மாநஸஜ்ஞாநமாத்ரமேயிறேயுள்ளது என்னும்லகுத்வஜ்ஞானம். அதாவது. ஸ்வல்பம் என்கிற ஜ்ஞானமும்; உபேயகௌரவமும் - உபாயாந்தரங்களாலே ஸாதிக்கப்பட்ட பகவத்ப்ராப்தியே அதிகம் என்று சொல்லுமதும்; ஐஶ்வர்ய கைவல்யங்களில் கௌரவஜ்ஞானம் என்று சொல்லும்போது இந்த ப்ரகரணத்துக்குச் சேராதிறே. ஆனாலும் ஒருவேளையிலே ப்ராமாதிகமாகவாவது ஐச்வர்யகைவல்யங்களில் கௌரவப்ரதிபத்தி தோற்றுமென்று தத்விஷயமாக ஒரு யோஜனை சொல்லவுமாம். யத்வா, ஸ்வகதஸ்வரூபப்ராபகத்தாலே ஸாதிக்கப்பட்ட பகவத்ப்ராப்தியே அதிகம் என்னுமது என்றும் சொல்லவுமாம். இன்னமும் உபாயவிரோதியாவது என்கிற வாக்யத்துக்கு ஒரு யோஜனை சொல்லவாவது, கீழ் ப்ரதிபாதித்தப்ரபத்தித்வைவித்யத்தினுடையஸ்வரூபவைலக்ஷண்யத்தைதர்சிப்பித்த அநந்தரம் ஆசார்யாபிமாநமாகிற உபாயத்தை அருளிச்செய்கையாலே, உபாயம் ஆவது ஆசார்யாபிமானம் என்னும் அதுக்கு விரோதி மேல்சொல்லுகிற வாக்யசதுஷ்டயம் என்றும் தர்சிப்பிக்கிறாராகவுமாம். எங்ஙனே? என்னில், இந்த சரமோபாயத்துக்கு விரோதிஆவது- உபாயாந்தரங்களானகர்மாதி ஸாதனசதுஷ்டயத்துக்கும் வைலக்ஷண்யத்தை உபபாதிக்கிறதும், அவ்வுபாயசதுஷ்டயத்தில் சக்தியில்லாதவனுக்கேயிறே. இது ஸௌலபமாக விறிக்

---

சிறுமை பாராதே ஸகல கைங்கர்யங்களையும் புரிந்தாப்போல், திருவாராதனம் திருவலகிடுதல் முதலிய கைங்கர்யங்களில் வாசி தோற்றுதபடி அவைகளில் ருசி பிறக்கவேண்டுவதித்தினையேயாம். ஸ்ரீபரதாழ்வான் படைவீட்டிலே பிரிந்திருந்து செய்தவடிமைகளும் செய்யவேணுமென்று இளையபெருமாளுக்குண்டானதுபோலுமுண்டாகவேணும்.

இத்தைப்பற்றவேஆழ்வார்'நின்கோயில்சீய்த்து'என்றும், "வயலணியனந்தபுரம் கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே" என்றும்,'கொடுவினையேனும் பிடிக்க நீயொருகால் கூவுதல் வருதல்செய்யாய், உன்றன் திருஉருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும்' என்றருளிச்செய்தார்.



கப்பட்டது என்று நினைத்து இவன் விஷயத்தில் அநாதாரூபலகுத்வமும், இவ்வுபாயத்தால் ப்ராப்தி பலிக்குமோ பலியாதோஎன்று சங்கித்து கர்மாதிகள் மூன்றிலேயாதல்ப்ரபத்தியாலேயாதல் பலிக்கும் என்கிற வழியாய் சொல்லும் உபேயகௌரவமும் என்று சொல்லுமதும் ஒருபக்ஷமுண்டிறே. எந்த உபாயமாகவுமாம். 'ஸாஹிப்ரதமஸாதகம்'என்னும்படி பக்தியுண்டானாலிறே பலிக்கும் என்று நிர்வாஹம். "குருரேவ பரம் ப்ரஹ்ம" இத்யாதி. இங்ஙனெல்லாம் யோஜிப்பது,நஞ்ஜீயர்"ஈதெல்லாம் பண்ணவேண்டிற்று உபாயவிரோதி"யென்று பொதுவாக அருளிச்செய்கையாலே. விரோதிபாஹுள்யமும். க்ஷேத்ராணி மித்ராணி என்கிற ஶ்லோகத்தில் ப்ரதிபாதித்தபடியே, ப்ரபந்நனுக்குச் சோதவையான விரோதிபஹுளங்களும். ஆக உபாயாந்தர வைலக்ஷண்ய ப்ரதிபத்யாதிசதுஷ்டயமும் உபாயவிரோதியாகக்கடவது.

(அவ.) இனிமேல் ப்ராப்திவிரோதியை அருளிச்செய்கிறார்— (ப்ராப்திவிரோதியாவது) என்று தொடங்கி.

மூ சகூ. ப்ராப்திவிரோதியாவது- ப்ராரப்த சரீரசம்பந்தமாய் அனுதாபசூந்யமாய் குருவாய் ஸ்திரமாயிருந்துள்ள பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாரங்கள்.

(வ்யா) ப்ராப்திவிரோதி ஆவது - பகவத்ப்ராப்திக்கு விரோதி ஆகிறது; ப்ராரப்தசரீரஸம்பந்தமாய் - ஜன்மஹேதுவான ப்ராரப்த கர்மசரீரத்துடனே ஸம்பந்தித்திருக்கையாய், அனுதாபசூந்யமாய்- அனுஷ்டானத்தை ஸ்மரிப்பது; அதாவது பகவதபசாராதிகளை புத்திபூர்வகமாகப் பண்ணுமவனுகையாலே'பச்சாத்தாபோநாஸ்தி, என்னும்படியன்றிக்கே, பஶ்சாத்தாபம் லேசமுமில்லாதேயிருக்குமதாய்; குருவாய் 'அவஜாநந்தி மாம் மூடா:' என்றபடி மூடரான என்னை ரக்ஷகன் என்றறியாதே "தாநஹம் த்விஷத:" என்று க்ரூராய் த்வேஷிக்குமவர்களை அஸுரயோனிகளிலே தள்ளிவிடுவன் என்று கண்ணன்றானே அருளிச்செய்திருக்கையாலே அதிகமாய்; ஸ்திரமாயிருக்கிற - யாவதாத்மபாவியாயிருக்கிற; பகவத் அபசார, பகவான்விஷயத்தில் பண்ணுகிற அபராதங்களும்,பாகவதஅபசார- அஹங்காரமூலமாகவும் அர்த்தமூலமாகவும் காமமூலமாகவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் பண்ணும் அபராதங்களும்- அஸஹ்ய அபசாரங்கள்- காரணமின்றிக்கே பகவத்விஷயமென்று

